2

# சிறகுகள்

தமயந்தி அண்ணாந்து பார்த்தாள். பயங்கர அவசரத்துடன் கூட்டம் கூட்டமாய் ஆகாயத்தில் பச்சையும் வெள்ளையுமாய் கறுப்பும் சாம்பலுமாய் பறவைகள் பறந்து கொண்டிருந்தன. கரிய மேகக்கூட்டங்கள் உருண்டு திரண்டு நகரும் லாவகத்தைச் சற்று நேரம் பார்த்தபடி அவள் நின்றபோது பெரிய பெரிய பொட்டாக நீர்த்திவலைகள் மேலே விழுந்தன. சில்லென்று அடித்த காற்றில் உடம்பு சிலிர்த்தது.

''பெரிய மழை வரும்போல இருக்கு.''

அவள் திடுக்கிட்டுக் குரல் வந்த திசையைப் பார்த்தாள். வேலிக்கப்பால் ஓர் ஆண் நின்றிருந்தான். முன்பின்பரிச்சய மில்லாத வன். நிச்சயம் அந்தக் கிராமத்தைச் சேர்ந்தவன் இல்லை. தமிழ் பேசும் விதத்தில் தெரிந்தது. அவள் கலவரத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தாள்.

''இந்தக் கட்டடத்திலே நீ தனியா என்ன செய்யறே?'' என்றான் அவன். அவளுக்கு தூக்கிவாரிப் போட்டது.

இவன் அசாத்திய துணிச்சல்காரன்தான்.

இவன் உள்ளூர்வாசி இல்லாதது மட்டுமில்லை. இந்த ஊரின் கட்டுப்பாடுகளைப் பற்றி ஏதும் அறியாதவன். அவன் தொடர்ந்து

அவளைப் பார்த்துச் சிநேகிதமாகச் சிரித்தான். ''இங்கே என்ன அல்லி ராஜ்யமா?'' 'ஆண்கள் யாரும் பிரவேசிக்கக் கூடாதுன்னு எழுதி யிருக்கு?' என்று கட்டடத்தின் மேல் இருந்த எழுத்துகளைக் காண் பித்தான். அவளுக்குக் கலவரம் அதிகரித்தது. எத்தப்பனோ எல்லப்பனோ எந்த நிமிஷமும் காட்டிலிருந்து திரும்பலாம். இவனைக் கண்டால் முதுகுத் தோலை உரித்துவிடுவார்கள். அவர்கள் வருவதற்குள் இவன் போய்விட வேண்டுமே என்றிருந்தது அவளுக்கு.

''இந்த வேலியைத் தாண்டி நான் உள்ளே வரலாமா?'' என்றபோது அவனுடைய கண்கள் அவளுடைய ரவிக்கை போடாத தோளின்மேல் அமர்ந்திருந்தன. அவள் அவசரமாக 'கூடாது' என்று தலையை மட்டும் ஆட்டிவிட்டு உடனடியாகக் கட்டடத்துக்குள் நுழைந்தாள்.

உள்ளே சென்று தரையில் அமர்ந்தபோது நெஞ்சு படபடத்தது. வெளியே கவிந்துகொண்டு வந்த மேகத்தினால் அறைக்குள் இருள் படர்ந்திருந்தது. அறையின் மூலையில் விறகு அடுப்பில் சோற்றுப்பானையில் உலை கொதித்துக் கொண்டிருந்தது. அதற்குப் பக்கத்தில் சற்றுத் தள்ளி பொம்மக்கா குழந்தைக்குப் பால் புகட்டிக் கொண்டிருந்தாள்.

''யார்ரீ அது?'' என்றாள்.

''யாருமில்லையே'' என்று புளுகும்போது நெஞ்சு மறுபடி அடித்துக் கொண்டது.

''பேச்சுக்குரல் கேட்டது?'' என்றாள் பொம்மக்கா விடாமல்.

''வெளியிலே இருக்கும், எனக்குத் தெரியாது.''

''கொஞ்சம் சோறு பதம் பாரு'' என்றாள் பெரியவள்.

தமயந்தி எழுந்தாள். ''இன்னும் ஆகல்லே'' என்று அடுப்பைத் தணித்து வைத்தாள். அருகில் துவையலுக்கு அரைக்க வைக்கப்

பட்டிருந்த வெங்காயத்தை எடுத்துப் பச்சைமிளகாயைச் சேர்த்து கல்லில் அரைக்க ஆரம்பித்தாள். 'அல்லி ராஜ்யமா?' என்று அந்த ஆள் கேட்டது நினைவுக்கு வந்தது. அவன் பரிகாசமாகக் கேட்டது போலிருந்தது. பஞ்சாயத்துக் கூட்டங்களின்போது யாராவது ஆண் கூட்டத்துக்கு வரவில்லையென்றால் ''வீட்டுக்குள்ளே அல்லி ராஜ்யம் நடக்குது'' என்பார்கள். 'பெண்டாட்டி போன்னாத்தான் வருவான்' என்று சிரிப்பார்கள். பெண்டிர் ஒதுங்கியே இருக்கும்போது அவர்களை ஏன் இவர்கள் பேச்சில் இழுக்கிறார்கள் என்று அவளுக்குக் கோபம் வரும். நாட்டாண்மை பூராவும் ஆண்கள். அதுவும் எத்தப்பனும் எல்லப்பனும் இருந்துவிட்டால் அந்த இடத்தில் பெண்கள் பதுங்கித்தான் நிற்பார்கள். ''எல்லாம் உங்க நன்மைக்குத் தான்'' என்பார் எத்தப்பன் மாமா.

''கெடுபிடி இல்லேன்னா நம்ம ஜனத்திலே கட்டுப்பாடு இருக்குமா?'' என்பார். சண்டை கிண்டையென்று இங்கு யாரும் போடுவதில்லைதான். பஞ்சாயத்துக்கு வரும் வழக்குகள்கூட சாமான்யமானவைதான்.

''நாம வாயைத் தொறந்தாதானே சண்டை வரும்?'' என்றாள் பொம்மக்கா. முன்பு ஒரு முறை இதே மாதிரி அவளுடன் சேர்ந்து விலக்கானபோது. அப்பொழுது தமயந்திக்குத் திருமணமாகவில்லை. சாதாரணமாகவே பொம்மக்கா அதிகம் பேசி அவள் பார்த்ததில்லை. அன்று அபூர்வமாக ஏதோ பேச்சின் இடையில் இதைச் சொன்னபோது ஒரு சோகம் இழையோடிற்று. அன்று இன்னும் மூன்று பேர் வயதான பெண்கள் அவர்களுடன் விலக்காகி அமர்ந்திருந்தார்கள். வீட்டு விலக்காகியிருக்கும் பெண்களுக்காக முன்பு ஊரின் எல்லையில் ஓர் ஓலை வேய்ந்த குடிசைதான் வேய்ந்திருந்தார்கள். அந்தப் பக்கம் எந்த ஆணும் போகக்கூடாது என்ற கிராமத்து நியதியை மீறி ஒரு வெளி ஆள் உள்ளே எப்படியோ ஒரு முறை நுழைந்துவிட்டான். அவனைக் கட்டிவைத்து உதைத்தபோது பொம்மக்கா அழுததாகச் சில பெண்கள் சொல்வார்கள். அதற்குப்

பிறகுதான் இந்தச் செங்கல் கட்டிடம் வந்தது. எதற்காக இப்படித் தனியாக உட்கார்த்தி வைக்கிறார்கள் என்று யாரும் கேட்டதில்லை. கேட்க வேண்டும் என்றும் தோன்றியதில்லை.

துவையலை அரைக்கும்போது 'அந்த ஆள் சொன்னது சரிதான், இங்கு அல்லி ராஜ்யம்தான்' என்று தமயந்தி நினைத்துக் கொண்டாள். ஊரில் எல்லா ஆண்களும் பயப்படுவது அம்மனுக்குத்தான். இந்த ஊரில் போலீஸ் கிடையாது. அம்மன்தான் போலீஸ்.

அவள் துவையலை வழித்து எடுத்து வைத்துப் பானையி லிருந்த நீரில் கல்லையும் கையையும் கழுவி மீண்டும் கதவுக்கு வெளியே வந்து நின்று கொண்டாள்.

''அடியே இருட்டிப்போச்சு. வெளியிலே ஏன் நிக்கிறே?'' என்ற பொம்மக்காவுக்கு ''உள்ளே புழுங்குதுக்கா'' என்று பதில் சொன்னாள். ''வர்ற மழையும் நின்னுடுச்சே?''

இன்னும் முழுசாக இருட்டவில்லை. மலை உச்சியிலிருந்து இருள் விரிய ஆரம்பித்திருந்தது. வேலிக்கு அப்பால் தெரிந்த மலையடிவாரத்தில் இன்னும் வெளிச்சம் தெரிந்தது. அந்த ஆள் எங்கேயாவது தென்படுகிறானா என்று கண்களைத் துழாவினாள். எங்கேயும் காணோம். அவளுக்குத் தெரியாத உலகத்தின் பிரதிநிதி அவன் என்னும் விஷயம் அவளது ஆர்வத்தைக் கிளப்பிற்று. அவளை சுவாரஸ்யப்படுத்திற்று.

''இந்த வேலியைத் தாண்டி நீ என்னிக்காவது போயிருக்கியா பொம்மக்கா?''

குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு பொம்மக்காவும் வந்து நின்றாள்.

''எங்க போறது?'' என்று கேட்டாள். சுருக்கமாக தொலைவை, மலையடி வாரத்தைத் துழாவும் பார்வை ஒன்று பார்த்தாள். அன்று ஒரு

நாள் அடிவாங்கிய வழிப்போக்கனின் நினைவு அவளுக்கு வந்திருக்கும் என்று தமயந்தி நினைத்துக் கொண்டாள்.

''அங்கெல்லாம் பெண்கள் இஸ்கோலுக்குப் போறாங்களாம். வேலைக்குப் போறாங்களாம். ஆண்களுக்குச் சமதையா.''

''போகட்டும்!'' என்று பொம்மக்கா சிரித்தாள். ''நம்ம ஆண்களே படிச்சு உத்தியோகம் பார்க்கப் போகல்லே. ராக்கப்பன் ஒருத்தன் படிச்சு என்ன கிழிச்சுப்புட்டான்? உத்தியோகமும் கிடைக்கல்லே. படிச்ச கர்வத்திலே காட்டு வேலைக்கும் இப்ப லாயக்கில்லே. தப்பா நினைக்காதேடி.''

ராக்கப்பன் ஒரு மோசமான உதாரணம் என்று தமயந்தி நினைத்துக் கொண்டாள். அவளைவிட அவன் நான்கு வயது பெரியவன். சின்ன வயதில் சேர்ந்து விளையாடினதுதான். அப்பொழுதெல்லாம் வெகுளித்தனமாகப் பேசிச் சிரிப்பான். பிடிவாதம் பிடித்து நாலு கல் தொலைவில் இருக்கும் பள்ளிக்குச் சென்று படித்தவன். மெல்ல மெல்ல எல்லாரிடமிருந்தும் விலகிப் போனான். முன்பிருந்த கலகலப்பு இல்லை. வெள்ளைச் சிரிப்பு இல்லை. விசனமா, கர்வமா என்று புரியாத ஒரு பாவனையுடன் வளைய வந்தான். ஆனால் அவன்தான் அவளுக்கு முறைமாமன்.

''அதெல்லாம் வேற உலகம்டீ தமயந்தி'' என்றாள் பொம்மக்கா. ''நாம இங்கதான் கெடக்கணும்.'' பிறகு அடிக்குரலில் சொல்லிக் கொண்டாள். ''படுக்கறதும் புள்ளையைப் பெக்கறதும்கூட ஊருக்காகத்தான். நமக்காக இல்லே.''

தமயந்தி திடுக்கிட்டாள். ஆனால் எதுவும் கேட்கவில்லை. சாதாரணமாக விலக்காகி அமர்ந்திருக்கும் காலத்தில் பெண்கள் தங்களுக்குள் ஏதேதோ அந்தரங்கங்கள் பேசிக் கொள்வார்கள். தமயந்திக்குச் சிலது புரியும்; சிலது புரியாது. ஆனால் காதைத் தீட்டிக் கொண்டு எல்லாவற்றையும் கேட்கப் பிடிக்கும். இப்போது வேறு

எந்தப் பெண்ணும் இல்லாத காரணத்தால் இவள் தன்னிடம் சொல்கிறாள் என்று தோன்றிற்று. அல்லது கல்யாணமாகி விட்டவள் என்கிற எண்ணமிருக்கலாம். அடி வயிற்றில் காரணம் புரியாமல் சங்கடப்படுத்திற்று.

சடசடவென்று மழை பெய்ய ஆரம்பித்தது. இருவரும் அவசரமாக உள்ளே நுழைந்து வாசல் கதவைச் சாத்தினார்கள். அறையின் மூலையில் சிறிய சிம்னி விளக்கு எரிந்தது. அதன் வெளிச்சத்தில் அவர்களது நிழல்கள் கூரை வரை எழுந்தன. லேசாகத் தாலாட்டுப் பாட்டுப் பாடிக் குழந்தையைத் தூங்க வைக்கும் பொம்மக்காவைப் பார்க்கையில் தமயந்திக்கு சொல்லத் தெரியாத பச்சாதாபம் ஏற்பட்டது. பொம்மக்காவின் குரல் மெல்லியதாக இனிமையாக இருந்தது. இவளுடைய புருஷன் நாகப்பன் முரடன். குடியும் நல்ல சாப்பாடும் தன்னுடைய பிறப்புரிமை என்று நினைப்பவன். அது இல்லாத நாள்களில் இவள் தலை முடியைப் பிடித்து இழுத்து நடுத்தெருவில் அடிப்பான். பெரியவர்கள் சமாதானப்படுத்தி உள்ளே அனுப்பி வைப்பார்கள். இவளுடைய பாட்டை அவன் என்றாவது கேட்டிருப்பானோ என்று தமயந்தி வியந்து கொண்டாள். சமையலறைச் சுவர்களில் பொம்மக்கா ஓவியம்கூட வரைவாள். முழுக்க முழுக்க பெண்களின் உருவங்கள். ஆகாயத்துக்குக் கையை உயரத் தூக்கிக் கொண்டு நிற்கும் உருவங்கள். இரண்டு கைகளாலும் எதையோ தாவிப் பிடிக்கிற மாதிரி.

''எதுக்குக்கா இவங்கள்ளாம் இப்படி நிக்கிறாங்க?'' என்று அவள் வியந்திருக்கிறாள். பொம்மக்கா சும்மா சிரிப்பாள்.

''விளக்கமெல்லாம் என்னைக் கேக்காதே. எனக்கு அப்படித்தான் தோணுது....''

குழந்தை தூங்கிவிட்டது. அதை ஒரு கந்தல் துணியில் கிடத்திவிட்டு பொம்மக்கா எழுந்தாள். இருவரும் மௌனமாகச்

சாப்பிட்டுப்படுத்தார்கள். படுத்த சிறிது நேரத்தில் பொம்மக்கா தூங்கிப்போனாள்.

தமயந்தி தூக்கம் வராமல் புரண்டாள். மாலையில் பார்த்த அந்த வாலிபனின் முகம் கண்ணில் நின்றது. அவனுடைய சரளமான பேச்சும் சிநேகிதச் சிரிப்பும் வசீகரமாக இருந்தன. அந்த வேலிக்கப் பால் இருக்கும் உலகம் அப்படித்தான் இருக்கும் என்று தோன்றிற்று. பெண்கள்கூட அப்படித்தான் இருக்கவேண்டும் அந்த உலகத்தில் சிறகு முளைத்த பட்சிகள் மாதிரி. பெண்களைப் பற்றி பேச ராக்கப்பன் விரும்புவதில்லை. உண்மையில் எதைப் பற்றியுமே அவளுடன் பேச விரும்பாதவன்போல் நடந்துகொள்கிறான். அவளைத் திருமணம் செய்து கொள்ள அவன் விரும்பவில்லையோ என்னவோ, ஆனாலும் அவளுடைய மாமனாகிப் போன காரணத்தால் அவனுக்கு வேறு வழியும் இல்லை. எதையோ தொலைத்து விட்டவனைப்போல, அவன் வேறு நினைவுகளில் அமிழ்ந்தவனாய் அவளுடன் படுத்து உறங்குகிறான். அவனிடமிருந்து அவள் எதையும் எதிர்பார்க்க வில்லை. அந்தக் கிராமத்தில் எல்லாருடைய வாழ்க்கைச் சக்கரமும் அப்படித்தான் ஓடுகிறது. திருமணம் என்பது ஒரு சமூக ஏற்பாடு. வெளியிலிருந்து எந்த ஆளும் இங்கு வர முடியாது. இங்கிருப் பவர்களேதான் சுழன்று சுழன்று முறை சொல்லி அதுவும் ஒரு சமூகக்கடமை என்பது போல தங்களுக்குள்ளே மணமுடிக்க வேண்டும். ஐந்து வயசிலேயே ராக்கப்பன்தான் அவளுடைய கணவன் என்று அவளுக்குத் தெரியும்.

வெகு நேரம் கழித்து அவளுக்கு மெல்லத் தூக்கம் வந்தது. கனவில் வேலிக்கப்பால் இருக்கும் உலகம் தெரிந்தது. பொம்மக் காவின் ஓவியத்தில் இருக்கும் பெண் உருவங்களைப்போல அவள் கைகளை உயரத் தூக்கிச் சிறகுகளாய் விரித்து அந்த உலகத்துக்குத் தாவினாள். ''நான் இஸ்கோலுக்குப் போறேன். உத்தியோகம் பார்க்கறேன்'' என்று அரற்றியபோது ராக்கப்பன் சிரித்தான். 'அடச்சீ நீயா' என்றான். 'ஊர் ஜனம் உன்னை ரவிக்கைகூடப் போட விடாது.'

நான்காம் நாள் காலையில் விடிவதற்கு முன்பே விழிப்பு வந்தது. அவள் பொம்மக்காவிடம் சொல்லிவிட்டுச் சிற்றருவிக்குச் சென்று தலை முழுகி வீட்டை அடைந்தாள். ராக்கப்பன் பட்டணத்துக்குப் போயிருப்பதாக பாட்டி சொன்னாள். அவன் இல்லாததால் எந்த வித்தியாசமுமில்லாமல் நாள் சென்றது. படுத்ததும் உறக்கம் வந்தது.

நான்கு நாள் கழித்து ராக்கப்பன் வந்தான் நல்ல செய்தியுடன். அவனுக்குப் பட்டணத்தில் வேலை கிடைத்து விட்டதாம். அதை அவன் நேரிடையாக அவளிடம் வந்து சொல்லவில்லை. வீட்டில் பொதுவாகப் பெரியவர்கள் பேசும்போது அவளுக்கு விவரம் தெரிந்தது. இனிமேல் ராக்கப்பன் பட்டணத்தில்தான் அறை எடுத்துக் கொண்டு வசிப்பான் என்றும் தெரிந்தது. பகபகவென்று அவளுள் ஆசைகள் துளிர்த்தன. ராக்கப்பனைத் தனியாகச் சந்திக்கும் தருணத்தில் அவள் அவனிடம் மெல்லிய குரலில் சொன்னாள்.

''பட்டணத்துக்கு நானும் வர்றேன் மாமா. என்னையும் கூட்டிட்டுப்போ.'' ராக்கப்பன் திடுக்கிட்டு அவளைப் பார்த்தான். ''அதெல்லாம் முடியாது புள்ளே. ஊர் சம்மதிக்காது. பெண்களை வெளியிலே அனுப்பற வழக்கம் இங்க இல்லேன்னு உனக்குத் தெரியாது?''

அவள் பேசாமல் நின்றாள். எத்தனையோ கேள்விகள் மனசைக் குடைந்தன. ''நீ எடுத்துச் சொல்லேன் ஊருக்கு. உன் பெண்டாட்டி தானே நான்? புருஷனோடு சேர்ந்திருக்கணும்னு பெண்ஜாதி நினைக்கிறதில என்ன தப்பு?''

ராக்கப்பன் நிமிர்ந்து அவளுடைய பாசிமணி மாலைகளையும் ரவிக்கையணியா மார்பைப் போர்த்திய மெல்லிய சேலைத் தலைப்பையும் பார்த்து முணுமுணுத்தான். ''வெளியுலகத்துப் பெண்களுக்கும் உனக்கும் சம்பந்தமேயில்ல. நீ என் பெண்ஜாதின்னு அவங்க இடையிலே எப்படி நிறுத்தறது?''

''அங்கே போனா நானும் ரவிக்கை போடுவேன்.''

அவன் சிரித்தான்.

''ரவிக்கை போட்டா மாறிடுவியா? அதெல்லாம் வேண்டாம். முதலாவது ஊர் சம்மதிக்காது. ஊரை விரோதிச்சுக்கிட்டேன்னா எனக்கு நல்லதில்லே.''

அவளுக்குத் துக்கம் அடிவயிற்றை சுழற்றிக் கொண்டு எழுந்தது. ஊரை எதிர்த்துக் கொண்டு போனவர்களிடம் பஞ்சாயத்து கருணை காட்டாது. அந்த உதாரணங்களை இவன் அவளுக்கு ஞாபகப்படுத்த வேண்டியதில்லை. வெளி ஆள் உள்ளே நுழையக் கூடாது என்பதுபோல இந்த இடத்தைச் சேர்ந்த பெண் வேலியைத் தாண்டக்கூடாது. ஆண் தாண்டலாம். இங்கு இருக்கும் பெண்கள் இவர்களுடைய உடைமை.

அவளுக்குத் தெளிவாக ஏதும் சொல்லத் தெரியவில்லை. பலவிதமான உணர்ச்சிகள் நாபியிலிருந்து பொங்கிப் பொங்கி மூச்சை முட்டின.

''எனக்கு அதெல்லாம் தெரியாது. என்னையும் கூட்டிக்கிட்டுப் போ. நீ சம்பாதிக்கிறே இல்லே? ஊர் தயவு எதுக்கு?''

அவனுக்கு அத்தனை கோபம் வரும் என்று அவள் நினைக்கவில்லை. பளாரென்று அவள் கன்னத்தில் அவன் அறைந்தபோது அவள் நிலைகுலைந்து போனாள். ஆனால் கண்ணில் நீர் வரவில்லை. கன்னத்தின் எரிச்சலைத் தடவியபடி அவனை தீர்க்கமாகப் பார்த்தாள்.

''நீ இல்லாம இங்க தனியா இருக்கிறது எனக்கு இஷ்டமில்லே'' என்றாள்.

''தனி என்ன? எத்தனை பேர் இருக்காங்க அந்த வீட்டிலே? என்னுடைய அண்ணங்க, தம்பி, எல்லாரும் உனக்கு மாமா உறவு - வெளி ஆள்கள் இல்லே.''

அவள் சடக்கென்று அவனை நிமிர்ந்து பார்த்தாள். அவள் சொல்ல நினைத்ததை அவன் புரிந்துகொண்டானா என்று அவளுக்

குத் தெரியவில்லை. மின்னல் கீற்றுபோல அவன் பார்வையில் சங்கடம் தெரிந்தது. அவளை நேராகப் பார்க்காமல் எங்கேயோ பார்த்தபடி சொன்னான்.

''இந்தக் கிராமத்து வழக்கப்படிதான் நீ இருந்துக்கணும். நான் லீவு நாளைக்கெல்லாம் இங்கே வருவேன். அதனாலே உனக்குச் சங்கடம் ஏதும் இருக்காது.''

அந்தக் கணத்தில் அவனை அவள் வெறுத்தாள். 'சீ! நீயும் ஒரு புருஷனா?' என்று உள்ளுக்குள் கெட்ட வார்த்தைகள் சொல்லிச் சபித்தாள்.

''சங்கடம் ஏதும் இருக்காது.''

ஆக,அவளுடைய நிலை அவனுக்குப் புரியாமல் இல்லை. எத்தனை பெரிய கோழை அவன்! இல்லை, இல்லை. அது கோழைத் தனம் இல்லை. திமிர். எல்லாப் பெண்களும் சொல்வது சரிதான். இவன் திமிர் பிடிச்சவன். என் விசனத்தைப் புரிஞ்சுக்காத, புரிஞ்சும் மதிக்காத திமிர். படிச்சவன் இப்படியிருந்தா அந்தப் படிப்புக்குத்தான் கேவலம்.

மனசில் திமிறிக்கொண்டு பாயும் உணர்ச்சி வேகத்தை அமுக்கமுடியாத படபடப்புடன் அவள் தோட்டத்தில் வேலை செய்யக் கிளம்பினாள். தெருவெல்லாம் வதவதவென்று குழந்தைகள். கோவணத்துக்கூட வக்கில்லாத குழந்தைகள். குடும்பக் கட்டுப்பாடு வேன் ஒரு சமயம் இங்கு வந்தபோது வேலிக்கு அப்பாலேயே அடித்துத் துரத்தி விட்டார்கள். 'குழந்தை குட்டிங்க எங்களுக்கு நிறைய வேணும்' என்றார் எத்தப்பா, ஆவேசமாக அந்த வேனைப் பார்த்து. ''எல்லாருக்கும் சோறு போடுவா எங்க ஆத்தா!'' அவர் பேச்சைக் கேட்டுக்கொண்டு தடியுடன் வந்து நின்ற ஆண்கும்பல் மெத்தனத்துடன் புன்னகைத்தது. தடியைக் கண்டவுடன் வேன் புழுதியைக் கிளப்பிக்கொண்டு நகர்ந்தது. அந்த நேரத்தில் அங்கு

கூடியிருந்த பெண் கும்பலைப் பார்த்து எத்தப்பா தோரணையுடன் சொன்னார் -

''குழந்தை பெத்துப் போடறதைவிட உங்களுக்கெல்லாம் என்ன வேலை?'' சிரித்துக் கொண்டு நின்ற ஆண்களோடு பெண்களும் சிரித்தார்கள். பொம்மக்கா மட்டும் சிரிக்காமல் நின்றிருந்தது தமயந்திக்கு இப்பொழுது நினைவுக்கு வந்தது. 'படுக்கறதும் புள்ளை பெக்கறதும் நமக்காக இல்லே' என்று அவள் சொன்னதும் ஞாபகத்துக்கு வந்தது.

ராக்கப்பன் பட்டணத்துக்குக் கிளம்பிப் போனான். 'வாரக் கடோசியிலே வருவேன்' என்று பொதுவாகச் சொன்னான். அதற்குப் பிறகு இரவு வேளைகளில் ஊரடங்கி மனிதன் முகத்தை அடையாளம் காண முடியாத இருளில், தனியாக அவள் கிடக்கும் பாயில் யாராவது ஒரு மாமன் படுத்தான். அவள் முரண்டு செய்ததை அறிந்த ஆயா சிடுசிடுத்தாள். ''யாரும் செய்யாததையா செய்யிறே?'' என்றாள். ''உன் மாமன்கள்தானே?''

இதைத்தான் ராக்கப்பனும் சொன்னான். 'வெளியாட்கள் இல்லையே?' அதோடு வேறு ஏதோ சொன்னானே?

அவளுக்கு உடம்பெல்லாம் தகதகவென்று எரிந்தது. சிறகு முளைத்து எங்காவது இந்த வேலிக்கப்பால் பறந்து போய்விட முடியாதா என்றிருந்தது. பொம்மக்காவின் ஓவியங்கள் ஏன் ஆகாயத்துக்குக் கையைத் தூக்கிக் கொண்டு நிற்கின்றன என்று இப்போது புரிந்தது.

வாரக் கடைசியில் ராக்கப்பன் வந்தபோது தமயந்தியைக் காணவில்லை என்றார்கள். எங்கே மாயமாய் மறைந்தாள் என்று யாருக்கும் தெரியவில்லை. உள்ளூர் குளத்திலோ குட்டையிலோ

இல்லை. ''வேலியைத் தாண்டி எங்கோ போய்விட்டாள் நிச்சயமாய்'' என்றார்கள். 'வெளியாள் தொடர்பு ஏற்பட்டிருக்கும்' என்றார்கள். ''வீட்டு விலக்காய் இருந்தபோது வெளியாள் ஒருத்தனோடு அவள் பேசியதை பொம்மக்கா பார்த்தாளாமே!''

பஞ்சாயத்து கூடிற்று. அம்மனுக்கு நேர்ந்துவிட்ட அபராதத்துக் காக, கடா தண்டம் அளித்து பூஜை போட்டது. வேலியைத் தாண்டிப் போய்விட்ட பெண் திரும்பி வந்தாலும் சேர்த்துக் கொள்ள முடியாது என்றது.

ஆனால் தமயந்தி திரும்பி வரவேயில்லை.

அமுதசுரபி தீபாவளி மலர் 1991

